10-2

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள்

# பிருதாவலி



வெளியீடு :
ராம. பழ. அழகப்ப செட்டியார்
கோனபட்டு
சௌமிய 1970

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள்

# பிருதாவலி



வெளியீடு :

ராம. பழ. அழகப்ப செட்டியார்
கோறுபட்டு

சௌமிய 1970

10-2

உ
சிவமயம்
தெண்டாயுதபாணி துணை

# பதிப்புரை

"எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவியே யாதினும் அரிதரிது காண்" என்பது, தாயுமான அடிகள் திருவாக்கு. பெறுதற்கரிய மனிதப் பிறவியை, முன்னை நல்வினையின் பயனாகப் பெற்றிருக்கின்ற நாம், பிறவிப் பயனாகிய பேரின்பத்தை அடைவதற்குச் சிவ புண்ணியச் செயல்களை இடையறாது செய்து கொண்டேயிருக்க வேண்டும்.

பரம் பொருளாகிய சிவ பெருமானது பெரும் புகழையும் சிவநேசர்களாகிய சமய

குரவர்கள் — திருத் தொண்டர்கள் ஆதியோரின் சிறப்பியல்புகளையும் சிந்தித்துப் போற்றுவது, சிவ புண்ணியங்களுள் சிறந்த வொன்ருகும்.

எனது அறுபதாம் ஆண்டு நிறைவு சாந்தி விழாவைப், பிள்ளையார்பட்டியில் ஸ்ரீ கற்பக விநாயக மூர்த்தியின் அநுக்ஞை பெற்று, ஸ்ரீ சிவாகம முறையில் நடத்தத் திருவருள் கூட்டியிருக்கிறது. திருநீறு, உருத்திராக்கம். முதலிய சிவ சாதனங்களையே பொருள்களாகக் கொண்டு வாழ்ந்து, வாழ் நாள் முழுவதும் அன்னதானப் பணி செய்து, துறவறம் பெற்றுக் குன்றக்குடியில் விளங்கிய கோனுபட்டு சிவா பழநியப்ப செட்டியாரவர்களின் புதல்வரும், விதிப்படி சமய விசேட தீட்சைகள் பெற்றுச் சிவ பூசையை முறையாகச் செய்து வருபவருமாகிய 'சிவ்குமாரன்' பழநியப்ப செட்டியாரவர்களின் குறிப்பை

யேற்றுத் திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகளின் பெரும் புகழ் கூறும் பிருதாவளியை எனது அறுபதாம் ஆண்டு நிறைவு சாந்தி விழா ஞாபகார்த்தமாக வெளியிட்டுள்ளேன். இதனை வெளியிடும் பொறுப்பையும், எனது சாந்தி விழாவின் வைதிக சைவ நிகழ்ச்சிப் பொறுப்பையும் ஏற்று, நடத்தித் தர வேண்டுமென்ற எனது வேண்டுகோளை நிறைவேற்றித் தந்தருளிய, சிவஸ்ரீ தத்புருஷ தேசிகரவர்களுக்கு எனது வணக்கத்தையும் நன்றியறிதலையும் புலப்படுத்திக் கொள்ளுகிறேன்.

அன்புள்ள,

பிள்ளையார்பட்டி
6–4–1970

ராம. பழ.
அழகப்ப செட்டியார்
கோனபட்டு.

உ
சிவமயம்
பாலறாவாயர் துணை

# முன்னுரை

## சிவஸ்ரீ தத்புருஷ தேசிகரவர்கள்
## தேவகோட்டை

பரங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமான், மெய்யடியார்களை உய்யக்கொள்ளும் திருவருட் குறிப்புடையவராய், ஆசாரியப் பெருமக்களை அவ்வப் பொழுதுகளில் உதவி, அருள் புரிந்து வருகின்றார். புறச் சமயங்களாகிய களைகள் தோன்றிச் சைவ சமயமாகிய பயிருக்குப் பேரிடர் விளைத்த வேளையில், சிவபெருமான் திருவருளால் திருஞானசம்பந்தப் பெருந்தகையார் தோன்றிப் புறச் சமய நிராகரணமும், சைவ சமயத் தாபனமும் செய்தருளினார்.

ஞான தேசிகராகிய சம்பந்தமூர்த்தி களின் திருவடிகளைப் புணையாகப் பற்றி, அவரது புகழ் கூறுபவர்கள், இம்மையில் எல்லா நலங்களையும் பெற்று வாழ்ந்து, மறுமையில் சிவானந்தப் பெருவாழ்வில் திளைத்து இன்புறுவார்கள்.

திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகளின் புகழ்கூறும் பிரபந்தங்கள்–தோத்திரங்களாதியவை தென் மொழியிலும், வட மொழியிலும் பலப்பல உள்ளன. மதுரைத்திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீன மடாலயத்தில், திருஞான சம்பந்த சுவாமிகள் பிருதாவளி ஓதப்பெற்று வந்தது. சிவநேசர் திருக்கூட்டம் தனவணிக நகரத்தார்கள் வாழும் ஊர்களிலும், மற்றும் பல இடங்களிலும் சமயத் தொண்டு செய்து வந்த காலத்தில், சமயாசாரியர்களின் திருவுலா வேளையில், இந்தப் பிருதாவளியைச்

சைவ சித்தாந்தச் செல்வர் சொக்கலிங்க ஐயா அவர்கள் குறிப்பின்படி ஏனைச் சமயகுரவர் மூவரையும் தொடர்பு படுத்தி ஓதும்பேறு மிக இளம் பருவத்திலேயே நமக்கும், நமது பள்ளித் தோழர் பண்டித முத்துவேங்கடாசலம் ஐயர்வர்களுக்கும் கிடைத்தது.

நாளாவட்டத்தில் வழக்கொழியும் நிலையிலிருந்த இதனைக் கிரந்த எழுத்திலும், தமிழ் எழுத்திலும், உரையுடன் அச்சிட்டு வெளியிட வேண்டுமென்று நமது அன்புருவாகிய சிவகுமாரன் பழநியப்ப செட்டியாரவர்கள் அடிக்கடி சொல்லி வந்தார்கள். அவர்களது நல்லெண்ணம் இப்போது அன்பர் ராம. பழ. அழகப்ப செட்டியாரவர்கள் மூலமாகச் செயலுக்கு வந்து, பயன்தரத் தொடங்கியிருக்கிறது.

பல பிறப்புக்களில் செய்தபசு புண்ணியத்தின் பயனுகவே, பதி புண்ணியம் புரியும் வாய்ப்புக் கிட்டும். திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளின் பிருதாவளியை அச்சிட்டுத் தமது அறுபதாம் ஆண்டு நிறைவு சாந்தி விழா நினைவாக வெளியிட்ட அன்பர் ராம.பழ. அழகப்ப செட்டியாரவர்களுக்கும் இதனை வெளியிடுவதற்கு முன்னின்ற சிவகுமாரன் அவர்களுக்கும் நமது ஆன்ம நாயகராகிய ஸ்ரீ மீனுக்ஷியம்மை உடனுய சொக்கலிங்கப் பெருமான் திருவருளால் எல்லா வளங்களும் எய்துவனவாக.



நலமே தழைக.

---

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# கற்பக விநாயகர் துதி

தனயன் வேண்டினும்
சம்பத்து வேண்டினும்
மனையை வேண்டினும்
வான்பயன் வேண்டினும்
கனைவளங்கொள் கணேச புரேசனை
இனிய கற்பக மூர்த்தியை ஏத்துமே.

— சொக்கலிங்க ஐயா

திருச்சிற்றம்பலம்

பிடியதன் உருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே

— தேவாரம்

நினைத்தனை உள்ளதோர்
பூவினில்தேன் உண்ணாதே
நினைத்தொறும் காண்தொறும்
பேசுந்தொறும் எப்போதும்
அனைத்தெலும் புள்நெக
ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே
சென்றூதாய் கோத்தும்பி
— திருவாசகம்

எம்பந்த வல்வினைநோய்
தீர்த்திட் டெமையாளும்
சம்பந்தன் காழியர்கோன்
தன்னையுமாட் கொண்டருளி
அம்புந்து கண்ணாளும்
தானும் அணிதில்லைச்
செம்பொன்செய் அம்பலமே
சேர்ந்திருக்கை ஆயிற்றே
— திருவிசைப்பா

பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப்
பாற்கடல் ஈந்தபிரான்
மாலுக்குச் சக்கரம் அன்றருள் செய்தவன்
மன்னிய தில்லைதன்னுள்
ஆலிக்கும் அந்தணர் வாழ்கின்ற சிற்றம்
பலமே இடமாகப்
பாலித்து நட்டம் பயில வல்லானுக்கே
பல்லாண்டு கூறுதுமே
— திருப்பல்லாண்டு

நன்மைபெரு கருள்நெறியே
வந்தணைந்து நல்லூரின்
மன்னுதிருத் தொண்டனார்
வணங்கிமகிழ்ந் தெழும்பொழுதில்
உன்னுடைய நினைப்பதனை
முடிக்கின்றோம் என்றவர்தம்
சென்னிமிசைப் பாதமலர்
சூட்டினான் சிவபெருமான்
— பெரியபுராணம்

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பிருதாவளி

3 3

ஸ்ரீ கைலாஸோந்நத த்வாதசாந்த

SHRI KAILASONNATHA DHWADHASHANTHA

2 3

ச்யாமளா பீடாரூட ஸ்ரீ மீநாக்ஷி

SHYAAMALAA PEETAAROODA SHRI MEENAAKSHI

3 4

சுந்தரேச்வராபிந்ந ஸ்வரூப

SUNDHAREASHWARABHINNA SWAROOPA

பரசிவ புத்ர ரத்ந குமார

PARASHIVA PUTHRA RATHNA KUMAARA

3

குருமண்ய துல்யாவதார,

GURUMANNYA THULYAAVATHAARA

2
ஸ்ரீ பார்வதீ ஸ்தந்ய
SHRI PAARVATHEE STTHANYA

3 4 3
பாநலப்த திவ்யக்ஞாந
PAANALABTHHA DHIVYAGNAANA

3 3
விச்ருத ஸகல நிகமாகம
VISHRUTHA SAKALA NIGAMAAGAMA

4 3 3 3
ஸாரபூத த்ராவிட வேத
SAARABHOOTHA DHRAAVIDA VEADHA

ப்ரவக்த : ஸ்ரீமத் பரமசிவ
PRAVAKTHAH'A SHRIMATH PARAMASHIVA

4 3
கருணா ஸமதிகத
KARUNAA SAMADHHIGATHA

முக்தாமய சதுரச்ரயாந
MUKTHAAMAYA CHATHURASHRAYAANA

3
கீயமாந சத்ர சாமர
GEEYAMAANA CHATHRA CHAAMARA

3
ஶ்ரீசிந்ந காஹளாதி ஸமஸ்த
SHRICHINNA KAAHALAADHI SAMASTHA

3 3
ப்ருதாவள்யலங்க்ருத க்ஞான
BRUDHAAVALLYALANKRUTHA GNAANA

விக்ஞான சக்ரவர்த்திந்நு ஸர்வ
*VIGNAANA CHAKRAVARTTHINNU SARVA*

4 3
ஜந ஸங்க ஸத்யோ நிர்வாண
JANA SANGKA SADHYO NIRVAANA

3 3
தீக்ஷாவ்யாயாப வர்க வர்ஷ
DEEKSHAAVYAAYAAPA VARGA VARSHHA

விச்ராண ஜீமூத, பரமத
VISHRAANA JEEMOOTHA PARAMATHA

4 3 3
களப கேஸரிந்நு, சைவ ஸித்தாந்த
KALABHHA KEASARINNU SHAIVA SIDDHANTHA

2 4
ஸ்தாபநாசார்ய, ஸ்ரீ ராஜாதி
STTHAAPANAACHAARYA SHRI RAAJAADHHI

3 3
ராஜ பாண்ட்ய மஹாராஜ குரோ,
RAAJA PAANDYA MAHAARAAJA GURO,

3 4
க்ஷபண சாக்யாதி மஹாந்தகார
KSHPANA SHAAKYAADHI MAHAANDHHAKAARA

4
நிவாரண க்ஞான பாநோ, வீக்ஷண
*NIVAARANA GNAANA BHHANO VEEKSHHANA*

3 3
அநர்ஹ அர்ஹ த்வஜ உச்சேதந
*ANARHA ARHA DHHVAJA UCCHEADHANA*

4 3
பூர்வக ஸ்ரீமத் வ்ருஷப த்வஜ
*POORVAKA SHRIMATH VRUSHHABHHA DHWAJA*

2
ஸ்தாபக ஶைவ ஸமய கர்த்த:
STTHAAPAKA SHAIVA SAMAYA KARTTHAHAA

2 3 3
ஸர்வக்ஞ பீடாரூட ஸ்ரீ ஜகத்
SARVAKGA PEETAAROODA SHRI JAGADH

3 3 4 3
குரோ, ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக
GURO SHRI GNAANASAMBANDHHA DEASIKA

3 3
ஸ்வாமிந்நு வாகீஸ சுந்தர
SWAAMINNU VAAGEESHA SUNDHARA

4
மாணிக்க வாசக ஸ்வாமிபிஹீ
MAANICKKA VAACHAKA SWAAMIBHIHE'E

3
ஸஹ அத்ராகத்ய பரிபால்யச
SAHA ATHRAAGATHYA PARIPAALYACHA

அஸ்மாந் விக்ஞான விதரணேந
ASMAAN VIGNAANA VITHARANEANA

4 4
விஜயீபவ விஜயீபவ ஜய ஜய,
VIJAEEBHHAVA VIJAEEBHHAVA JAYA JAYA

# ஶ்ரீ ஜ்ஞாநஸம்பந்த ப்ரபந்தாவளீ ॥

ஶ்ரீ கௌண்டிந்யகோத்ர ஆஶ்வலாயந
ஸூத்ரோத்பந்ந ஶ்ரீ மீநாக்ஷீ ஸுந்
தரேஶ்வராநுக்ரஹ ப்ரஸாதித, பரமஶிவபாத
ஹ்ருதயகுமார ஸுகுமார ப்ருதுகாவதார,
ஶ்ரீபார்வதீ ஸ்தந்யபாநலப்த திவ்யஜ்ஞாந
விஶ்ருத ஸகல நிகமாகம ஸாரபூத
த்ராவிட வேதப்ரவக்த்ரு; ஶ்ரீஶைவ பரமஶிவ
கர்மண ஸமயாசாரத ஶாக்தாசய ஸதாபரஶ்
யாந பீயமாந ஸத்வாமோ ஶ்ரீ விஞகாஹ
ஷாஷ்டி ஸஹஸ்ர ப்ரபந்தாவல்யலங்க்ருத ஜ்ஞாந
விஜ்ஞாந ஸமுத்ரஸ்த்ரீணு, ஸஹஜந ஸம்வ
ஸம்ப்ரதாயாண தீக்ஷாபத்ய யாவஜ்ஜீ

𑌸𑌷𑍍𑌟𑌿𑌵𑌿𑌶𑍍𑌰𑌾𑌣𑌜𑍀 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌿𑌤 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥 𑌕𑌮𑌲
𑌕𑌸𑌰𑌿𑌨𑍍, 𑌭𑍋 𑌭𑍋 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤 𑌸𑍍𑌥𑌾𑌪𑌨𑌾
𑌚𑌾𑌰𑍍𑌯, 𑌶𑍍𑌰𑍀 𑌰𑌾𑌜𑌾𑌧𑌿𑌰𑌾𑌜 𑌪𑌾𑌣𑍍𑌡𑍍𑌯 𑌮𑌹𑌾
𑌰𑌾𑌜 𑌗𑍁𑌰𑍋 𑌕𑍍𑌷𑌪𑌣 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌿 𑌮𑌹𑌾𑌨𑍍𑌧
𑌕𑌾𑌰 𑌨𑌿𑌵𑌾𑌰𑌣 𑌜𑍍𑌞𑌾𑌨𑌭𑌾𑌨𑍋, 𑌵𑍀𑌕𑍍𑌷𑌣𑌾
𑌨𑌸𑌹𑌾𑌸 𑌸𑍍𑌵𑌜𑌾𑌤𑍀𑌯 𑌪𑌦𑍍𑌧𑌤𑍀𑌕,
𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌾𑌷𑌸𑍍𑌵𑌜 𑌸𑍍𑌥𑌾𑌪𑌕, 𑌭𑍋 𑌭𑍋 𑌸𑌮𑌯
𑌕𑌤𑌿𑌃, 𑌸𑌜𑍍𑌜 𑌪𑌾𑌰𑌾𑌵𑌾𑌰, 𑌶𑍍𑌰𑍀 𑌜𑌗
𑌦𑍍𑌗𑍁𑌰𑍋 𑌶𑍍𑌰𑍀𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧 𑌦𑍇𑌶𑌿𑌕𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌨𑍍,
𑌆𑌶𑍀𑌃, 𑌸𑌾𑌮𑍍𑌪𑍍𑌰𑌤, 𑌮𑌣𑌿𑌕𑍍𑌕𑌵𑌾𑌚𑌕 𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌭𑌿𑌃
𑌸𑌹𑌾𑌤𑍍𑌰 𑌗𑌤𑍍𑌯 𑌪𑌰𑌿𑌪𑌾𑌲𑍍𑌯 𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍,
𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨 𑌵𑌿𑌤𑌰𑌣𑍇𑌨 𑌵𑌿𑌜𑌯𑍀 𑌭𑌵 । 𑌵𑌿𑌜𑌯𑍀
𑌭𑌵 । 𑌜𑌯 𑌜𑌯 ॥



# பிருதாவளி உரை

திருக்கயிலாயத்தினும் மேலானதாகிய துவாத சாந்தத் திருத்தலத்தில் மரகத மணியாதனத்தில் எழுந்தருளி யிருக்கும் அங்கயற் கண்ணி பங்களுகிய சுந்தரேசப் பெருமானுடன் பிரிப்பின்றி யிருக்கும் வடிவத்தை உடையவரே!

பரமசிவனது புத்திர இரத்தினம் என்னும் குமார குருமணியை ஒத்து நிலவுலகில் தோன்றியவரே!

மலையரசன் மகள் ஊட்டிய திருமுலைப் பாலை உண்ட பெருநலத்தினுல், சிவஞான மயமான எல்லா வேத சிவாகமங்களின் கருத்துக்களையும் கொண்ட தமிழ் வேதத்தை விரித்துரைத்த பெருமானே!

மேலான சிவபெருமானது கருணையினுல் வழங்கப் பெற்ற முத்துச் சிவிகையில் ஏறிக் குடை, கவரி, திருச்சின்னம்,

எக்காளம் முதலிய விருதுகள் அணி செய்யத் திருவுலா வரும் அபரஞான, பரஞான அரசரேறே! எல்லா மக்களுக்கும் அழிவற்றதாகிய வீடுபேற்றைச் சத்யோ நிர்வாண தீக்ஷை செய்து வழங்கிய மேகம் போன்றவரே!

புறச்சமயங்களாகிய யானைக் கூட்டத்திற்குச் சிங்கம் போன்றவரே!

சைவ சித்தாந்த சமயத்தை நிலை நிறுத்தும் ஆசாரியரே!

அரசர்க் கரசனுகிய பாண்டிய மன்னனது அஞ்ஞான இருளை அகற்றி யருளிய குருமூர்த்தியே!

சமணம், சாக்கியம் முதலிய பேரிருளை நீக்கும் ஞான சூரியனே!

பார்ப்பதற்குக் கூடத் தகுதியற்ற சமணர்களின் கொடியை அறுத்து அந்த

இடத்தில் இடபக்கொடியை நிலைநாட்டிச் சைவ சமயம் தழைக்கும்படி வைத்த பெருந்தகையே!

சகல கலா பீடத்தில் வீற்றிருப்பவரே! உலக குருவே!

ஸ்ரீ ஞான சம்பந்த தேசிக சுவாமியே! அப்பர், சுந்தரர், மணிவாசகராகிய ஆசாரியர்களுடன் இங்கு எழுந்தருளி ஆட்கொண்டு எங்களுக்குச் சிவ ஞானத்தை வழங்குகின்ற தேவரீரது ஒப்பற்ற திருவடிகள் மேலோங்குக! மேலோங்குக!! வெல்க! வெல்க!!



# வாழ்த்து



நீடாயுள் பெற்று நிறையும் வளங்களுடன்
பீடார்ந்து வாழ்க பெரும்புவியில் - வாடா
மலர்மங்கை கேள்வனருள் மன்னஅழ கப்பன்
நிலமங்கை யேத்த நெடிது.

நலமே தழைக




வசந்தா பிரஸ், தேவகோட்டை.